ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

# ஸ்ரீப$_4$க்திஸாரோத$_3$யம் - பொழிப்புரை

1) பூ$_4$மௌ பா$_4$ர்க்க$_3$வ வாமதே$_3$வ ப்$_4$ருக$_3$வோऽப்யத்ரிர் வஸிஷ்டோ$_2$ऽங்கி$_3$ரா:
ப்$_3$ரஹ்மாணம் ப்ரணிபேதுருத்தமகு$_3$ணம் க்ஷேத்ரம் விஜிஜ்ஞாஸவ: |
ஸ த்வஷ்டுஸ் துலயைகதோ வஸுமதீம் பூ$_4$ஸாரமப்யேகத:
த்$_4$ருத்வா யோகி$_3$வரேப்$_4$ய ஆதி$_3$ஶதி$_3$மம் பூ$_4$ஸாரமப்யுத்தமம் ||

முன்பு த்$_3$வாபரயுகத்தில் பா$_4$ர்க்க$_3$வர், வாமதே$_3$வர், ப்$_4$ருகு$_3$, அத்ரி, வஸிஷ்ட$_2$ர், அங்கிரஸ் ஆகிய மஹர்ஷிகள் பூ$_4$மியில் மிகவும் சிறந்த க்ஷேத்ரத்தை அறிய விரும்பியவர்களாய் ப்$_3$ரஹ்மாவைப் பணிந்தனர். ப்$_3$ரஹ்மாவும் தே$_3$வசிற்பியான விஶ்வர்கர்மாவைக் கொண்டு பூ$_4$மியெல்லாம் ஒரு தட்டும், திருமழிசைக்ஷேத்ரம் ஒரு தட்டுமாக தராசில் வைத்து நிறுக்க, திருமழிசையை வைத்த பக்கம் கனத்திருக்க, அதுவே "மஹீஸாரக்ஷேத்ரம்" என்று யோகி$_3$ஶ்ரேஷ்டர்களான அந்த மஹர்ஷிகளுக்கு எடுத்துரைத்தார்.

2) பூஸாராபி$_4$த$_4$யா விதே$_3$ஹப$_4$வந க்ஷேத்ரம் விநிர்தி$_3$ஶ்ய தேஷ்-
வாஸீநேஷ்வத$_2$ பா$_4$ர்க்க$_3$வோ முநிவரோ தே$_3$வம் ஜக$_3$ந்நாயகம் |
ஸத்ரேணாயதவர்த்திநா ஸ்ம யஜதே பத்நீ ததா$_2$த்வே முநே:
அம்ஶேனாம்பு$_3$ஜலோசனாயுத$_4$வரஸ்யாபந்ந ஸத்வாऽப$_4$வத் ||

இவ்வாறு விதே$_3$ஹப$_4$வநக்ஷேத்ரமாகிய திருமழிசையை பூமியில் சிறந்த இடமாக அறிந்து, அம்மஹர்ஷிகள் அவ்விடத்தில் நித்யவாஸம் பண்ணிக்கொண்டிருக்கும் பொழுது, பா$_4$ர்க்க$_3$வ மஹர்ஷி "தீ$_4$ர்க்க$_4$ஸத்ரம்" என்கிற யாக$_3$த்தாலே ஜக$_3$ந்நாத$_2$ப் பெருமானை ஆராதி$_4$க்கலானார். அப்பொழுது அவருடைய பத்நீ, தாமரைக்கண்ணனான எம்பெருமானின் திவ்யாயுத$_4$ங்களில் சிறந்தவரான ஸுத$_3$ர்ஶநாழ்வானின் அம்ஶத்தினால் க$_3$ர்ப்$_3$பி$_4$ணியானாள்.

3) மாஸே த்$_3$வாத$_3$ஶகே$_3$ முநீந்த்$_3$ர க்$_3$ருஹிணீ ஸா த்$_3$வாபரே தைஷ்யகே
ஸித்$_3$த$_4$ார்தி$_2$ந்யஹிமாம்ஶுவார ஸஹிதே தாரே மக$_2$ாக்$_2$யாத$_4$ரே |
ராகாயா அபரேத்$_3$யுரஸ்ய ஜக$_3$த: க்ஷேமாய ஸௌத$_3$ர்ஶநம்
ப்ராஸூதோல்ப$_3$விவேஷ்டனாவ்ருததனும் பிண்ட$_3$ம் ப்ரசண்ட$_3$ார்சிஷம் ||

பன்னிரண்டு மாதங்களுக்குப் பின்பு, ஸித்$_3$த$_4$ார்த்தி வருடத்தில் மக$_2$ம் என்னும் பெயர் கொண்ட நக்ஷத்ரத்தில், ஞாயிற்றுக்கிழமையில் பூர்ணிமைக்கு மறுதி$_3$நம், அந்த ப$_4$ார்க்க$_3$வ முநிவரின் பத்நீ இவ்வுலக நன்மையின் பொருட்டு, திருவாழியாழ்வானின் அம்ஶம் பொருந்தியதும், மிகவும் ப்ரகாஶிப்பதும், க$_3$ர்ப்$_3$ப$_4$ வேஷ்டநத்தினால் மறைக்கப்பட்ட தே$_3$ஹத்தை உடையதுமான ஒரு பிண்ட$_3$ரூபத்தை பெற்றெடுத்தாள்.

4) அவ்யக்தம் முநித$_3$ம்பதீ கிமித$_3$மித்யுத்ஸ்ருஜ்ய வேத்ரே க$_3$தௌ
க$_3$ர்ப்பே$_4$ாSதே$_2$ந்தி$_3$ரயா ஸமஸ்த ஜக$_3$தாம் த$_4$ாத்ரா பு$_4$வா சேக்ஷித; |
ஸம்பூர்ணஸ் ஸகலாங்க$_3$துங்க$_3$ஸுஷமஸ்ஸ்தன்யாபி$_4$லாஷா த்$_3$ருதே
தத்தாத்$_3$ருக்$_3$ ஜக$_3$தீ$_3$ஶ தி$_3$வ்யகருணாது$_3$க்$_3$தே$_4$ந வ்ருத்$_3$தி$_4$ம் க$_3$த: ||

அம்முநித$_3$ம்பதிகளும் "இதுவென்" என்று ஒன்றும் புலப்படாத அப்பிண்ட$_3$த்தை ஒரு பிரப்பம்புதரில் எறிந்துவிட்டுச் சென்றனர். பின்பு அந்த பிண்ட$_3$ம் அனைத்துலகங்களையும் த$_4$ரிப்பவனான எம்பெருமானாலும், பெரிய பிராட்டியாராலும் பூ$_4$மிப்பிராட்டியாராலும் கடாக்ஷிக்கப்பட்டதாய், ஸர்வாவயவங்களும் பரிபூர்ணமான ஓர் ஆண்குழந்தையாகப் பரிணமித்து, ஸ்தந்யபாநத்தில் ஆசையின்றி ஜக$_2$ந்நாத$_2$ப் பெருமானின் தி$_3$வ்ய கருணையால் வளர்ச்சியடைந்தது.

5) தே$_3$வஸ்ய ஸ்வயமேவ த$_3$ர்ஶிதவதோ தி$_3$வ்யம் ஸ்வகீயம் வபு:
விஶ்லேஷேண ருத$_3$ந்தமேத்ய ஶிஶுகம் ஶ்ரீமத் ஸமாக்$_2$யோ நர; |
க்$_3$ருஹ்ணந் வேத்ர க்ருது$_3$த்$_3$க$_3$தாதி புலகோ ஹ்ருஷ்ட ஸ்த்ரியை நாமத:
ஶ்ரீமத்யை ஸமத$_3$ாத$_3$ஸௌ ச ஜக்$_3$ருஹே ஹ்ருஷ்டாநபத்யாSசிரம் ||

அவ்வாறு எம்பெருமான் தனது திருமேனியைத் தானாகவே காட்டி மறைய, அக்குழந்தையான திருமழிசையாழ்வாரும் எம்பெருமானின் பிரிவால் அழலானார்.

அவ்வமயம் அங்கு வந்த திருவாளன் என்னும் பிரம்பறுப்பாளன் அழும் குழந்தையைக் கண்டு மயிர்க்கூச்சும், மகிழ்ச்சியும் கொண்டவனாய், அத்தை எடுத்துச் சென்று தன் மனைவியான பங்கயச்செல்வியிடம் கொடுத்தான். பிள்ளைபேறற்ற அவளும் மகிழ்ந்தவளாய் உடனே அக்குழந்தையை எடுத்துக் கொண்டாள்.

6) உல்லோகஸ்த$_{2}$ ஶிஶுப்ரசாரமமுகம் த்$_{3}$ருஷ்ட்வா மஹீஸாரகே$_{3}$ா
வ்ருத்$_{3}$த$_{4}$ஶ்ஶூத்ரவரோ ஹ்யபத்ய வித்$_{3}$ரோ ஜாயாஸஹாய: பய: |
ஆத$_{3}$ாயார்த்த$_{2}$யதே ஸ்ம ஸோऽபி க்ருபயா தஸ்மிந் பபௌ தத்பய:
ஶிஷ்டம் தத்பிப$_{3}$தம் ஶூதோ ப$_{4}$வதி வாமித்யாஹ ஸத்யாஶிஷம் ||

அக்குழந்தை உலகை வழக்கிற்கு மாறாக பசிதாகம் இல்லாமல் வளர்ந்து வருவதைக் கேள்வியுற்று, பிள்ளைபேறற்றவனும், திருமழிசையில் நித்யவாஸம் செய்பவனும், சதுர்த்த$_{2}$ வர்ணத்தில் பிறந்தவனும், அறிவாளியுமாகிய ஒரு முதியவன் பாலமுது காய்ச்சி எடுத்துக்கொண்டு, தன் மனைவியோடு ஆழ்வார் இருந்தவிடத்தே வந்து ஸமர்ப்பித்தான். ஆழ்வாரும் அவனிடத்தில் க்ருபையாலே அவன் கொண்டு வந்த பாலமுதை அமுது செய்தார். பின்பு "அடியேன் அமுது செய்து ஶேஷித்த பாலை நீங்கள் பருகுங்கள். உங்களுக்கு புத்ரன் உண்டாவான்" என்று ஆஶீர்வதி$_{3}$த்தார்.

7) புத்ரோऽபூ$_{4}$த் கணிக்ருஷ்ண இத்யுருகு$_{3}$ணாசாரஸ்தயோர்வ்ருத்$_{3}$த$_{4}$யோ:
ஸூநுஸ்த்வேஷ ப்$_{4}$ருகூ$_{3}$த்தமஸ்ய ப$_{4}$க$_{3}$வத்காருண்ய ஸம்வர்தி$_{4}$த: |
ஆர்ஷத்வாத$_{3}$நுஸப்தமாத்து வயஸோ யோகே$_{3}$ த்$_{4}$ருதாபோஜக$_{3}$த்$_{3}$
தே$_{4}$தும் த்$_{4}$யாதுமநாப்சசார ஸமயாந் ஸர்வாநக$_{2}$ர்வாத்மநா ||

பின்பு அந்த முதிர்ந்த த$_{3}$ம்பதிகளுக்கு நற்குணங்களும், நற்செயல்களும் நிறைந்தவனான கணிகண்ணன் என்ற ஒரு மகன் உண்டானான். ப$_{4}$ார்க்க$_{3}$வபுத்ரரான ஆழ்வாரும், எம்பெருமானின் கருணையால் நன்கு வளர்க்கப்பட்டவராய், ரிஷிபுத்ரராகையாலே ஏழு திருநக்ஷத்ரத்திற்குப் பிறகு யோக$_{3}$ாப்$_{4}$யாஸத்திலே திருவுள்ளம் கொண்டார். அநந்தரம் யோக$_{3}$த்தில் ஜக$_{3}$த்காரணவஸ்துவை த்$_{4}$யாநத்துக்கு விஷயமாகச் சொல்லுகையாலே அவ்வாறு த்$_{4}$யாநிக்க ஸங்கல்பம் கொண்டு, அவ்வஸ்து எது என்றறியும் பொருட்டு அனைத்து

ஸமயங்களிலும் புக்கு ஆராய்ந்தார்.

8) வித்₃வாந் வர்ஷஶதேந பா₃ஹ்யஸமயாந் ஸர்வாநஸாராந்வித₃ந்
விந்த₃ந்விஷ்ணுபரத்வவைதி₃கமதே நிஷ்ட₂ாம் க₃ரிஷ்ட₂ாம் த₃தெ₄ள I
தேநைவாஶ்ரிதவத்ஸலோ முராரிபுஸ்ஸ்வீயஸ்வரூபாதி₄கம்
லீலாபோ₄க₃விபூ₄தி₃பே₄த₃மபி ச ப்ராகாஶயத்₃யோகி₃னே II

வித்₃வானான ஆழ்வாரும் வேத₃ப்ராமாண்யத்தை ஏற்காத பா₃ஹ்யமதங்களையும், வேத₃த்திற்கு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டி மதங்களையும் நன்கு ஆராய்ந்து அவைகள் ஸாரமற்றவைகள் என்றறிந்து, ஶ்ரிய:பதியான எம்பெருமானைப் பரனாகக் கொண்ட வைதி₃கமதத்தில் மிகச்சிறந்த நிஷ்டை₂யைக் கொண்டார். அடிபணிந்தவர்களிடத்தில் வாத்ஸல்யம் கொண்ட எம்பெருமானும், அதுவே பற்றாசாக, தன்னுடைய தி₃வ்யாத்மஸ்வரூபம் முதலியவற்றையும், லீலா மற்றும் நித்யவிபூ₄திகளின் வேறுபாட்டையும் ஆழ்வாருக்குக் காட்டிக் கொடுத்தான்.

9) ஏஷ ஶ்ரீபதிநா ப்ரகாஶித ப₃ஹூத்ரையந்த பர்யந்ததீ₄:
ஸ்வாநர்த்த₂ாந் த்₃ரவிட₃ ப்ரப₃ந்த₄வித₄யா நிர்மாய ஶர்மாவஹாந் I
லோகாநாம் ஜக₃த்₃ீஶ்வரம் க்ஷிதிரமாநாத₂ம் ஸத₃ா சிந்தயந்
ப்₃ருந்த₃ாரண்ய உவாஸ ஸப்தஶதகம் வர்ஷம் க₃ஜேந்த்₃ரஹ்ரதே₃ II

திருமகள்கொழுநனாகிய எம்பெருமானால் நன்கு தெரிவிக்கப்பட்ட மிகுந்த வேத₃ாந்த ஜ்ஞாநத்தை உடையவரான இவ்வாழ்வார் உலகங்களுக்கு நன்மை விளைவிக்கக்கூடியதான தான் பெற்ற அர்த்த₂விஶேஷங்களைத் தமிழ்ப்ரப₃ந்த₄ங்களாக இயற்றி, ஸ்ரீதே₃வீ மற்றும் பூ₄தே₃வீ மணாளனான ஜகந்நாத₂ப் பெருமானை எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டு, ப்₃ருந்த₃ாரண்யக்ஷேத்ரத்தில் (திருவல்லிக்கேணியில்) க₃ஜேந்த்₃ரஸரஸ்ஸின் கரையில் 700 திருநக்ஷத்ராங்கள் எழுந்தருளியிருந்தார்.

10) தத்தாத்$_3$ருக்கமலாஸக$_2$ஸ்ம்ருதி மஹாSSநந்தை$_3$ரமந்த$_3$ாயிதம்
கந்த$_2$ாஸீவநப$_3$ந்து$_4$ரம் த்ரிணயந: பஶ்யந் ம்ருட$_3$ாந்யா ஸஹ |
மத்தஸ்த்வம் வரமர்த்த$_2$யேதி கத$_2$யந் மோக்ஷோSஸ்த்விதி ப்ரார்த்தி$_2$த:
தத்ராஶக்தி வித$_3$ாSமுநா ஸ கதி$_2$த: ஸூசே: பத$_2$ாஸூத்ரணம் ||

அவ்வாறு ஶ்ரிய:பதியான எம்பெருமானை நினைந்து அளவற்ற ஆநந்த$_3$ங்கொண்டவரான ஆழ்வார், ஒருநாள் கிழிந்த வஸ்த்ரத்தைத் தைப்பதில் ஈடுபட்டிருக்க, முக்கட்பிரான் மலைமகளுடன் ஆகாயமார்க்$_3$க$_3$த்திலே செல்லுகையில், ஆழ்வாரைக் கண்டு "எம்மிடமிருந்து விரும்பிய வரத்தைப் பெற்றுக்கொள்ளும்" என்று கூறினான். ஆழ்வாரும் "ஆகில் மோக்ஷத்தைத் தாரும்" என்று வேண்டி, பின் அவ்விஷயத்தில் அவனது இயலாமையை அறிந்து "இவ்வூசியின் பின்னே நூல்வரும்படி வரம் தருவாய்" என்று இகழ்ச்சியாய் ருத்$_3$ரனை நோக்கிக் கூறினார்.

11) ருத்$_3$ரோ ரௌத்$_3$ரஜுஷா ப்ரஹாஸப$_4$வயா ருஷ்டோ நிடாலாக்$_3$நிநா
ஸம்ஸ்ப்ரஷ்டும் முநிபுங்க$_3$வம் க்ருதமதிஸ்தஸ்யாக்$_3$ர பாத$_3$ாக்$_3$நிநா |
ஜ்வாலாஜாலவிலாபிதத்ரிஜக$_3$தா ஸந்தாபிதோ வாரிதை$_3$:
வர்ஷந்நிர்வித$_3$ மாகலய்ய ப்$_4$ருகு$_3$ஜம் தம் ப$_4$க்திஸாரம் ஜகௌ$_3$ ||

அப்பரிஹாஸவார்த்தையினின்றும் உண்டான கோபத்தால் ருத்$_3$ரன் தன் நெற்றிக்கண் நெருப்பு மூலமாக முநிஶ்ரேஷ்ட$_2$ரான ஆழ்வாரைத் தீண்ட நிஶ்சயித்து, அவ்வாறே தன் நெற்றிக்கண்ணைத் திறந்துவிட, அக்கண்ணில் நின்றும் காலாக்$_3$நியானது கிளர்ந்தெழுந்தது. அதைக் கண்டு ஆழ்வாரும் தம்முடைய வலது திருவடியின் பெருவிரலிலே ஒரு கண்ணைத் திறந்து விட, அதினின்றும் மூன்றுலகங்களையும் தனது ஜ்வாலைக் கூட்டங்களால் துன்புறுத்துவதான பெருந்தீ கிளம்பியது. ருத்$_3$ரனும் அந்த அக்$_3$நியால் மிகவும் தாபங்கொண்டவனாய், அதைப் புஷ்கலாவர்த்தகம் என்கிற ப்ரளயகாலமேக$_4$ங்களால் தணித்து, அப்பெருத்த மழையிலும் சிறிதும் சலியாமல் எம்பெருமானையே அநுப$_4$வித்துக் கொண்டிருந்த ஆழ்வாரைக் கண்டு வியப்புற்று, அவரை "ப$_4$க்திஸாரர்" என்று போற்றிப் பாடினான்.

12) கஶ்சித்$_3$ வ்யாக்$_4$ரசரோऽந்தரிக்ஷ க$_3$மநஸ்தம் ஶுக்திஹாராபி$_4$த$_4$:
ப்ராப்ய ஸ்தம்பி$_4$த நைஜயாநக$_3$மனஸ்ஸ்வம் வாரவாணம் தி$_3$ஶந் ।
ஸத்$_3$யஸ்தத்க்ருத ரத்நகஞ்சுகத்$_3$ருஶா ஹ்ரீண: ஸ்வஹாரம் த$_3$த$_3$த்
தத் பத்$_3$மாக்ஷமயீம் ஸ்ரஜம் மணிமயீம் பஶ்யந் ஸ்துவந்நிர்க$_3$த: ॥

பின்பு ஆழ்வார் யோக$_3$த்தில் எழுந்தருளியிருக்கையில் ஶுக்திஹாரன் என்ற ஒரு ஸித்$_3$த$_4$ன், புலியை வாஹநமாகக் கொண்டு ஆகாயமார்க்க$_3$மாய்ச் செல்லுகையில், ஆழ்வாருடைய யோக$_3$ப்ரப$_4$ாவத்தாலே அவ்வாஹநம் அவர் மேல் போகாமல் தடைபட்டு நிற்க, அவனும் ஆஶ்சர்யத்துடன் ஆழ்வாரிடத்தே வந்து அவருக்கு ஒரு கவசத்தைக் கொடுத்தான். ஆழ்வாரோ அதை ஏற்காது, உடனே ஸ்வஸங்கல்பத்தால் ஒரு மணிமயமான கவசத்தை அவனுக்குக் காட்ட, அவனும் அதைக்கண்டு வெட்கமடைந்தவனாய், தன் கழுத்திலிருந்ததொரு மணிமாலையைக் கொடுக்க, இவரும் தன் கழுத்திலிருந்து ஒரு தாமரைமணிமாலையை எடுத்துக்காட்ட அது நவரத்நமயமாய் விளங்கக்கண்டு, அவனும் இவர் வைப$_4$வத்தைக் கொண்டாடி யத$_2$ாஸ்தாநமே சென்றான்.

13) நாம்நா கொங்கணஸித்$_3$த$_4$ இத்யதிதராம் க்$_2$யாதோ முனீந்த்$_3$ரம் க$_3$த:
லேஶேநாபிச கோடிவேத$_4$நபடும் ஸைத்$_3$த$_4$ம் ரஸம் தர்ஶயந் ।
தத்$_3$த$_3$த்தம் ஶதகோடி வேத$_4$ந சணம் கிட்டம் பரீக்ஷ்ய ஶ்ருதே;
ப்ரீதஸ்தம் கு$_3$ணரத்நரோஹண கி$_3$ரிம் ஸஸ்மார விஸ்மாபித: ॥

பின்பும், கொங்கணஸித்$_3$த$_4$ன் என்ற பெயரால் மிகவும் ப்ரஸித்$_3$த$_4$னான ஒரு ரஸவாதி$_3$, ஆழ்வார் இருந்தவிடத்தே வந்து தன் ஸித்$_3$தி$_4$யால் உண்டானதும் சிறுதுளியால் காணிகோடியை பிளக்கவல்லதுமான ஒரு ரஸகுளிகையைக் காட்ட, ஆழ்வாரும் அதை திரஸ்கரித்து, தம் காதில் குறும்பியை உருட்டி 'இது கோடாகோடியை பே$_4$தி$_3$க்கவல்லது' என்று கொடுத்தருள, அவனும் அதை ஶோதி$_3$த்துப் பார்த்து அப்படியே இருக்கக்கண்டு வியப்புற்று, மிகவும் மகிழ்ந்தவனாய் ஆழ்வாரை பல அற்புதகுணரத்நங்கள் நிறைந்த குன்றாய் நினைத்தான்.

14) ஶ்ரீபூ4ஸாரபுரீந்த்3ர தி3வ்யமஹஸாம் ராஶிம் ஶுத்3ரோஜ்ஜ்வலம்
த்3ருஷ்ட்வா ஸாரஸபூ4தயோகி3 மஹத3ாக்யாநா: ப்ரஹ்ருஷ்டாக3தா: ।
ப்ருஷ்ட்வா க்ஷேமமிமே ஸுயுக்தகுஶலாஸ்தேநாபி தேந்யோந்யத:
நேமுர்மோத3ஜப3ாஷ்பஶீதலத்3ருஶஸ்த்வாமந்த்ரய தம் தே க3தா: ॥

அநந்தரம், திருமழிசையாழ்வார் ஒரு கு3ஹையில் புக்கு யோக3த்தில் எழுந்தருளியிருக்கையில், இவரது தி3வ்யமான திருமேனியின் ஒளிக்கூட்டமானது, வெகுதூரம் ப்ரகாஶிக்க, அதைக்கண்டு வியந்து, பொய்கையார், பூதத்தார், பேயாழ்வாராகிற முதலாழ்வார்கள் அவ்விடத்தை அடைந்து குஶலப்ரஶ்நம் பண்ண, ஆழ்வாரும் 'முநிகாள்! நன்றாய் இருக்கிறீர்களோ' என்று வினவியருள, பின்பு ஒருவருக்கொருவர் தண்டனிட்டு, ஆநந்தக்கண்ணீர் பனிப்ப மிகவும் ப்ரீதியுடன் சில காலம் யோக3த்தில் எழுந்தருளியிருந்தனர், அதன் பின் அவர்கள் ப4ார்க்க3வ முநீந்த்3ரரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றனர்.

15) தீராத் கைரவிணீ ஸரோவரமணேராக3த்ய பூ4ஸாரகம்
ம்ருத்ஸ்நாயா அலப4ாகுலஶ்ஶுசிம்ருத3ஸ்த2ாநம் வ்ருஷாத்3ரீஶ்வராத் ।
ஸ்வப்நே ப்ராப்ய ம்ருத3ம் ஸிதாம் ப்ரஹ்ருஷிதோ க்3ருஹ்ணந் தநௌ த4ாரயந்
ஶ்ரீஸத்யவ்ரதநாமதி3வ்யநக3ரீம் ப்ராபத்3ப்4ருகே3ார்வம்ஶஜ: ॥

பின்பு ப4ார்க்க3வபுத்ரர் திருவல்லிக்கேணியிலிருந்து திருமழிசைக்கெழுந்தருளி சாத்திக்கொள்வதற்குத் திருமண் வேண்டிச் சோதித்த இடத்தில் திருமண் அகப்படாமல் கலக்கமுற, அப்பொழுது ஸ்வப்நத்தில் திருவேங்கடமுடையானிடமிருந்து திருமண் இருக்குமிடத்தை அறிந்து, அங்கே சென்று, ஶுத்தமான திருமண்ணைக் கண்டு, மிகவும் களித்து, அதை எடுத்துத் திருமேனியில் த4ரித்துக்கொண்டு, ஸத்யவ்ரதக்ஷேத்ரம் என்று பெயருடைத்தான காஞ்சீமாநகரை அடைந்தார்.

16) க3த்வா தத்ர யதே2ாக்தகாரிசரணத்3வந்த்3வம் ப்ரணம்யாத3ராத்
த்4யாயந் தத்ர ச ஸப்தவர்ஷஶதகம் தஸ்தௌ2 முநீந்த்3ரோ முத3ா ।
தத்ர ஶ்ரீகணிக்ருஷ்ணகே முநிவரம் ஸம்ஸேவ்யமாநே ஸத3ா
வ்ருத்3த4ா காசந ராங்க3வல்லி முக2யா ஶுஶ்ரூஷயாஸேவதா ॥

அவ்வாறு ப$_4$க்திஸாரர் கச்சிவெஃகாவிற்கு எழுந்தருளி யதே$_2$ாக்தகாரி எம்பெருமானின் திருவடியிணையை ஆத$_3$ரத்துடன் ஸேவித்து, ஈடுபாட்டுடன் த்$_4$யாநம் செய்து கொண்டு 700 வருட காலம் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது கணிகண்ணன் ஆழ்வாரை ஆஶ்ரயித்து, எப்பொழுதும் அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து கொண்டிருக்க, ஒரு மூதாட்டியும் ஆழ்வார் திருவடிகளில் ப$_4$க்தியுற்று, அவர் இருந்த இடத்தைத் திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல், முதலிய கைங்கர்யங்களை செய்து வந்தாள்.

17) தஸ்யை தி$_3$வ்யத$_3$யாரஸேன ப$_4$ரித: ப்ரீப$_4$க்திஸாரோ முனி:
பீநோத்துங்க$_3$குசத்$_3$வயம் ரதிபதேஸ்ஸர்வஸ்வஸர்வாங்க$_3$கம் |
தாருண்யம் ஸமத$_3$ாத்தயா முதி$_3$தயா ராஜாऽபி லஜ்ஜாபித:
தச்சி$_2$ஷ்யம் கணிக்ருஷ்ணமுஞ்ச$_2$நபரம் யோகீ$_3$ந்த்$_3$ரமாகாரயத் ||

ப$_4$க்திஸாரமுநிவரும் த$_3$யாரஸம் நிரம்பியவராய் அக்கிழவிக்குப் பெருத்த முலைத்தடங்களையும், மிக அழகிய அங்க$_3$ங்களையும், யௌவநத்தையும் கொடுத்தருளினார். அவளும் மிகவும் மகிழ்வுற்றிருக்க அந்நாட்டரசனான பல்லவராயன் அவளைக்கண்டு காமுற்று, மணஞ்செய்து வாழ்ந்திருக்கையில், நாளுக்கு நாள் தனது இளமைப்பருவம் நீங்குவதையும், அவளது பருவம் மாறுபடாதிருப்பதையும் கண்டு வியந்து, அதற்குக் காரணம் ஆழ்வாருடைய வரப்ரஸாத$_3$மே என்றறிந்து, அவ்வருளைத் தானும் பெறுவதற்காக உஞ்ச$_2$வ்ருத்தி செய்பவனும், ஆழ்வாரின் ஶிஷ்யனுமான கணிகண்ணனைத் தன்னிடத்திற்கு வரவழைத்தான்.

18) ராஜ்ஞா தேந சிரம் முநீந்த்$_3$ரசரணாஸக்தஸ்ஸ நிர்ப$_3$ந்தி$_4$தோ
நிஷ்க்ரம்யார்யவராய வ்ருத்திமமுகாமாவேத்$_3$ய சாமந்த்ர்ய ச |
ஸாகம் யோகி$_3$வரேண பந்நக$_3$ஶயேநாத்$_4$யேந பும்ஸா ஸமம்
ஸர்வைர்தே$_3$வவரைஸ்ஸஹைவ நிரக$_3$ாத்ஸாந்த்$_3$ரம் தமோऽபூ$_4$த்புரே||

ப$_4$ார்க்க$_3$வமுநிவரின் திருவடிகளில் ஈடுபட்ட கணிகண்ணன் "உம் ஆசார்யரை நம் பக்கல் அழைத்துக்கொண்டு வாரும்" என்று பல்லவ அரசனால் நிர்ப$_3$ந்தி$_4$க்கப்பட, அவனும் அதை மறுத்து, அங்கிருந்து புறப்பட்டு ஆழ்வாரிடம் சென்று நடந்த செய்தியை

விண்ணப்பஞ்செய்து அடியேனுக்கு இங்கிருந்து செல்ல விடைதந்தருள வேண்டும் என்ன, ஆழ்வாரும் எம்பெருமானுடன் புறப்பட நிஶ்சயிக்க, கணிகண்ணன் ஆழ்வாருடனும், ஆதிபுருடனான யதே$_2$ாக்தகாரி எம்பெருமானுடனும், அனைத்து தே$_3$வதைகளுடனும், அந்நகரத்தை விட்டு வெளியேறினான். அதனால் அந்நகரத்தில் உத$_3$யாஸ்தமயங்கள் தெரியாதே, கனத்த இருள் உண்டானது.

19) ராஜா பல்லவநாமகஸ்ஸசிவைஸ் ஸம்மந்த்ர்ய யோகீ$_3$ஶ்வரம்
வந்தி$_3$த்வா ஸுசிரம் ப்ரஸாத்$_3$ய ப$_3$ஹுத$_4$ா ஶிஷ்யேண ஸாகம் கு$_3$ரும்|
ஸார்த்த$_4$ம் தே$_3$வவரேண வார்த்தி$_4$தநயா காந்தேந ஸர்வைஸ்ஸமம்
காஞ்சீம் ப்ராபிதவாந்புரீம் அத$_2$ யத$_2$ாபூர்வம் புரம் நிர்ப$_3$பெ$_4$ள ||

பல்லவராய அரசனும் மிகவும் கவலையுற்று, தன் மந்த்ரிகளுடன் ஆலோசித்து கணிகண்ணன், ஆழ்வார் முதலியோர் உள்ள இடத்தைத் தேடி அடைந்து, ஆழ்வார் மற்றும் கணிகண்ணன் திருவடிகளில் விழுந்து தனது அபசாரத்தை மன்னித்தருளுமாறு பலவாறு வேண்டி, கணிகண்ணனுடனும், திருமகள் கொழுநனான எம்பெருமானுடனும், மற்றனைத்து தே$_3$வர்களுடனும், ஆழ்வாரைக் காஞ்சி நகரத்திற்கு அழைத்து வந்தான். பின்பு அந்நகரம் முன்போலவே பொலிவு பெற்றது.

20) காவேரீவ்ருத கும்ப$_4$கோணநக$_3$ரம் ப்ராப்தும் ஸமுத்கண்ட$_2$யா
க$_3$ச்ச$_2$ந் வ்யாக்$_4$ரமஹாபுரே க்வசித$_3$பி ப்ராந்தே க்$_3$ருஹஸ்ய ஸ்தி$_2$த:|
த்$_3$ருஷ்ட்வா ஸ்வம் விநிவ்ருத்தவேத$_3$பட$_2$நாந்விப்ராந் வ்யபேத ஸ்ம்ருதீந்
க்ருஷ்ணவ்ரீஹிநக$_2$க்ஷதைர்நிபுணயந் தஸ்தெ$_2$ள தத$_3$ாராதி$_4$த: ||

பின்பு ஆழ்வார் திருக்காவிரி பாயும் திருக்குடந்தை (கும்ப$_4$கோணம்) தி$_3$வ்யதே$_3$ஶத்தை அடைய பெருத்த ஆவலுடையராய், பெரும்புலியூர் என்ற க்$_3$ராமத்தில் ஒரு வீட்டு வாசற்திண்ணையில் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது அங்கு வேத$_3$ாத்$_4$யயநம் பண்ணுகிற ப்$_3$ராஹ்மணர்கள் ஆழ்வாரை தாழ்ந்த சாதியினராக எண்ணி, அத்$_4$யயநத்தை நிறுத்திவிட, பின்பு அவர்களுக்கு விட்ட இடம் தோன்றாமல் தடுமாற, ஆழ்வாரும் அதைக் கண்டு, கறுப்பு நெல்லை நகத்தாலே பிளந்து, குறிப்பாலே

"க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நக2நிர்பி4ந்நம்" (யஜுஸ்ஸம்ஹிதை 1-8-9) என்ற வாக்யத்தை உணர்த்தியருள, அவர்களும் ஆழ்வாரை தண்டனிட்டு உபசரித்தனர்.

21) யாம் யாம் யாதி தி3ஶம் முநிர்முராரிபுஸ்தஸ்யாமபூ4த் ஸம்முக2:
தத்3 த்3ருஷ்ட்வாऽத்3பு4தமக்3ரஜா அபி விபே4ரார்ச்சாஸ்வப4ாவாதி3கம்।
தத்3க்3ராமேஶ்வரதீ3க்ஷிதாய ஜக3து3ஸ்தேநாக்3ரபூஜார்பணாத்
ஈஜேக3ர்விதது3ர்மதாந் ப்ரஶமயந் ஸ்வாந்தஸ்த2லக்ஷ்மீப்4ருதா ॥

மேலும் அப்பெரும்புலியூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான், ஆழ்வார் உபாத3ாநத்திற்காக எந்தெந்த தி3ஶையை நோக்கிச் சென்றனரோ, அந்தந்த முக2மாகத் திரும்பியருளினான். அர்ச்சாமூர்த்தியின் இவ்வற்புதச் செயலை அக்கோயில் அர்ச்சகர் கண்டு சில ப்3ராஹ்மணர்களுக்குக்காட்ட, அவர்களும் அதைக்கண்டு, அப்பொழுது யாக3ம் செய்து கொண்டிருந்த அவ்வூர்த்தலைவரான பெரும்புலியூரடிகளிடம் கூறினர். அதைக் கேட்டவுடன் தீ3க்ஷிதரும் மிக்க மகிழ்ச்சியோடு வந்து, ஆழ்வாரை எதிர்கொண்டழைத்து அவருக்கு அக்3ரபூஜையைச் செய்தார். யாக3த்தில் பங்கு வஹிக்கும் ருத்விக்குகள் அதை ஸஹியாமல் பழிக்கத் தொடங்க, தீ3க்ஷிதரும் அந்த து3ர்மதிகளை அடக்க எண்ணி, ஆழ்வாரை வேண்ட, அவரும் அந்தர்யாமியான எம்பெருமானை தன் திருமார்பிலே அனைவரும் கண்டநுப4விக்கும்படிச் செய்ய, அந்த ருத்விக்குகளும் எம்பெருமானுடைய தி3வ்யமங்களவிக்3ரஹத்தைக் கண்ணார ஸேவிக்க, அந்த தீ3க்ஷிதரும் யாக3த்தை தொடர்ந்தார்.

22) க3த்வைஷோऽப்யத2 கும்ப4கோண நக3ரம் தத்ராஹிபே4கே3ஶயம்
ஸம்ஸேவ்ய ஸ்வஶஷபே4ாக்திகோஶஶதகம் மாருத்3வ்ருதாம்ப4ஸ்ஸு தம்।
க்ஷிப்த்வாऽப்4யாக3த கோஶயுக்3மமசிராத்3 க்3ருஹ்ணந் ஜக3ஜ்ஜீவயந்
தத்ரோத்த2ாநஶயம் ஹரிம் விரசயந் தேநாதிஸம்மாநித: ॥

பின்பு ஆழ்வார் திருக்குடந்தை திவ்யதே3ஶத்தை அடைந்து அங்கு திருவநந்தாழ்வான் மீது திருக்கண்வளர்ந்தருளும் ஆராவமுதனை நன்றாக ஸேவித்து, தமது நூற்றுக்கணக்கான ப்ரப3ந்த4ங்களின் ஸ்ரீகோஶங்களைத் திருக்காவிரியின்

ஜலப்ரவாஹத்தில் எறிந்து விட, மற்ற ப்ரப$_3$ந்த$_4$ங்களெல்லாம் வெள்ளத்தோடு செல்லும்போது, நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் என்னும் இரு தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ங்கள் மாத்திரம் ப்ரவாஹத்தை எதிர்த்து வர, ஆழ்வார் அவ்விரு தி$_3$வ்யப்ரப$_3$ந்தங்களைச் சடக்கென எடுத்து, உலகம் உய்வதின் பொருட்டு உபகரித்தருளினார். பின்பு ஆராவமுதனது ஶயநத்திருக்கோலத்தைக் கண்டு "காவிரிக் கரைக் குடந்தையுள் கிடந்தவாறெழுந்திருந்து பேசு" (திருச்சந்த - 61) என்று விண்ணப்பம் செய்ய, எம்பெருமானும் ப$_4$க்தபரதந்தரனாகையாலே, அர்ச்சாவதார வ்ரம்பைக் கடந்து எழுந்திருக்கப் புக, ஆழ்வாரும் அந்த நீர்மைக்குத் தோற்று, "வாழி கேசனே" என்று மங்களாஶாஸநம் பண்ண, எம்பெருமானும் எழுந்திருக்க முற்பட்ட அந்த உத்தாநஶாயித் திருக்கோலத்துடனே ஸேவை ஸாதி$_4$த்தருளினான். மேலும் ஆழ்வாருக்குத் திருமழிசைப்பிரான் என்று திருநாமம் வரும்படிச் செய்து கௌ$_3$ரவித்தான்.

23) தத்ரைவம் த்ரிஶதோத்தரம் ஸ ஶரத$_3$ாம் யோகே$_3$ ஸஹஸ்ரத்$_3$வயம்
ஸ்தி$_2$த்வா தி$_3$வ்யவசஸ்ஸுத$_4$ால ஹரிபி$_4$ஸ்ஸர்வம் ஜக$_3$த்$_3$வர்த$_4$யந் ।
லக்ஷ்மீநாயகமேவ ஸர்வஜக$_3$தாம் நாத$_2$ம் ஜக$_3$த்காரணம்
ஸர்வாத்மாநமிஹாபி ராஜிதபுரம் ஸூக்ஷ்மைருபாபீபத$_3$த் ॥

இவ்வாறு திருமழிசைப்பிரான் திருக்குடந்தைக்ஷேத்ரத்திலே 2300 வருடங்கள் யோக$_3$த்தில் எழுந்தருளியிருந்து, தனது தி$_3$வ்யவாக$_3$ம்ருதத்தால் அனைத்துலகையும் உய்வித்துக் கொண்டு இருந்தார். மேலும் திருமழிசைக்ஷேத்ரத்தில் கோயில் கொண்டவனும், அனைத்துலகங்களுக்குத் தலைவனும், ஶ்ரிய:பதியுமான எம்பெருமானே ஜக$_3$த்காரணம் என்று நுண்ணிய யுக்திகளால் உபபாத$_3$நம் செய்தார்.

24) பஶ்சாத்ஸுந்த$_3$ரயோகி$_3$வர்யப$_2$ணிதைர்க்$_3$ரந்தை$_2$ஸ்ஸஹஸ்ரைஸ் த்ரிபி$_4$:
வர்ஷைஸ்ஸப்தஶதாதி$_4$கைர் ப்$_4$ருகு$_3$பதேர்வ்யக்தம் வயோ வர்ணிதம் ।
க்ஷேமாஶம்ஸநகே ஸஹஸ்ரமதி$_4$கம் பகைக்ஷஸ் தத$_3$ர்ஹாந்வயாத்
ஸ்பர்த$_4$ாம் தேந ஜஹாது கல்பபி$_4$த$_3$யா நேயாபஶ்ச ருஷ்யுக்தய: ॥

பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிச்செய்த கு3ருபரம்பராப்ரப4ாவக்3ரந்தத்தில் திருமழிசைப்பிரானின் திருநக்ஷத்ரம் 3700 வருடங்கள் என்று கூறப்பட்டுள்ளது. அவரின் வாழித்திருநாமத்திலோ "நற்புவியில் நாலாயிரத்தெழுநூற்றோன் வாழியே" என்று 1000 வருடங்கள் அதி4கமாகக் கூறப்பட்டுள்ளன. இப்படியிருப்பினும், பெரியோரின் வார்த்தைகள் கல்பபே4த3த்தினால் பொருந்தும்படிச் செய்யக் கூடியவைகளாகையால், இவ்விருபக்ஷங்களிலும் உள்ள முரண்பாட்டைத் தவிர்க்க வேண்டியது[1].

25) இத்த2ம் ப்ரீவரத3ார்ய தி3வ்யகருணா ஸந்து4க்ஷித ஸ்வாத்மநா
தத்தாத்3ருங் நரஸிம்ஹதே3பரிகபு4வா தத்பாத3ஸம்ஸேவிநா |
க்3ருஹ்ணந்வீரரகூ4த்3வஹேந ரசிதம் ஸ்ரீப4க்திஸாரோத3யம்
நிர்து3க்க2ஸ்ஸுஸுகே2ா த3த4ாதி விமதே ஶார்தூ3ல விக்ரீடி3தம் ||

இவ்வாறு ஸ்ரீவரத3ார்யரின் தி3வ்யகருணையால் நன்கு பயில்விக்கப்பட்டவரும், நரஸிம்ஹாசார்யரின் குமாரரும், அவர்களின் திருவடிகளை நன்கு பணிந்தவருமான வீரராக4வாசார்யரால் ஶார்தூ3லவிக்ரீடி3தவ்ருத்தத்தில் அருளிச்செய்யப்பட்ட "ஸ்ரீப4க்திஸாரோத3யம்" என்ற இந்நூலைப் பயில்பவன் து3க்கமேதுமின்றி மிகுந்தஸுக2த்துடன் பரமதத்தில் புலி போன்ற க3தியுடையவனாவான்.

*****

---

1) தற்போது கிடைக்கும் ஆறாயிரப்படிகு3ருபரம்பராப்ரப4ாவ பதிப்புகளில் திருமழிசையாழ்வார் 4700 திருநக்ஷத்ரங்கள் எழுந்தருளியிருந்ததாகக் காணப்படுகிறது. ஆனால், அண்ணாவப்பங்கார் ஸ்வாமி மேலேயுள்ள 24ம்ஸ்லோகத்தில், பின்பழகியபெருமாள்ஜீயரின் க்3ரந்த2த்தில் திருமழிசையாழ்வார் 3700 திருநக்ஷத்ரங்கள் எழுந்தருளியிருந்ததாக உல்லேகி2த்துக் கூறுவதால், அக்காலத்திலிருந்த தாளபத்ரஸ்ரீகோஶங்களில் 3700 திருநக்ஷத்ரங்கள் என்றிருந்திருக்கக்கூடும். வாழித்திருநாமத்தைக்கண்டு பின்புள்ளார் அதனை 4700 ஸம்வத்ஸரங்கள் என்று மாற்றியிருக்ககூடும் என்று தோன்றுகிறது.